THE HON. SRI M. BHAKTAVATSALAM : லிக்னைட் சுரங்க தொழிற் சாலையின் அவசியத்தை கனம் அங்கத்தினர் உணர்வார்கள் என்று நம்புகிறேன். அதனால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு போதிய நிவாரணம் அளிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தி வருகிறார்கள். அவர்களுக்கு இடவசதியும், விவசாயத்திற்குத் தக்க வசதியும் செய்து கொடுக்கவேண்டியிருந்தது. இவை காடுகள் என்றாலும் பெரிய மரங்களோ, செடிகளோ உடையது அல்ல, லிக்னைட் சுரங்கத்தைச் சுற்றி இருபது, முப்பது மைல் தூரத்தில் அப்பேர்ப்பட்ட இடங்கள் இல்லையாதலால் இந்தக் காடுகளை அழிக்க எற்பாடு செய்யப்பட்டது.

SRI M. KANDASAMI PADAYACHI : உளுந்தூர்பேட்டை, இடைக்கல், பாண்டுவ முதலிய இடங்களில் உள்ள காடுகள் அழிக்கப்பட்டாலும் அங்கே உடனடியாக வீடுகளைக் கட்டுவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்கப்படவில்லை. இப்போது விறகு கூட பொறுக்க முடியாமல் மக்கள் கஷ்டப்படுவதை அரசாங்கம் அறியுமா ? அதற்குத் தக்க நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : காடுகள் பூராவும் வீடுகள் கட்டவேண்டிய அவசியமில்லை. ஆனால் எங்கெங்கே திரும்ப மரங்கள், செடிகள் வைத்து வளர்க்க முடியுமோ அதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : நெய்வேலி சேப்ளாநத்தம் கிராமத்தில் ஆயிரக்கணக்கான எக்கரா புறம்போக்கு நிலங்கள் இருக்கும்போது இந்தக் காடுகளை அழிக்கவேண்டிய அவசியம் என்ன ? அழிக்கப்பட்ட காடுகளில் விவசாயம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வீடுகள் கட்டுவதற்கு மட்டும் அல்ல நிலம். நெய்வேலி நல்ல மண் அல்ல என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியுமோ தெரியாதோ எனக்குத் தெரியாது. பக்கத்தில் விவசாயம் செய்வதற்கும் வசதிவேண்டும் என்று காடுகள் அழிக்கப்பட்டது.

*Silk-worms*

* 468 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the extent of lands under mulberry cultivation for rearing silk-worms in the Talavadi firka, Coimbatore district ; and

(*b*) the quantity and value of silk-yarn produced in 1957?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) 1,317 acres at the end of December 1957.

(*b*) Nil, as there are no silk reeling establishments in Talavadi firka.

SRI P. G. MANICKAM : இந்த முசுக்கட்டைப் புழுக்களை வளர்ப்பதற்கான நிலங்கள் தாலவடியில் அதிகமாக இருப்பதால் பட்டுப் பூச்சிகளை அபிவிருத்தி செய்வதற்காக அங்குள்ள விவசாயிகளுக்கு தாராளமாக உதவியும் கடன் வசதியும் செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்து வருகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்காக எதாவது உதவி வேண்டுமென்று அவர்கள் சர்க்காருக்கு மனு செய்தால் அதை பரிசீலனை செய்கிறோம்.

SRI P. G. MANICKAM : கொள்ளேகாலம் பிரிந்ததற்குப் பிறகு தாலவடியில் இந்தப் பட்டுக்களை விற்பதற்குறிய மார்க்கெட்டிங் சொஸைட்டிகள் இல்லாமல் இருக்கிறது. மேலும் அங்குள்ளவர்கள் மலைவாசிகள் ஆதலால் பட்டை விற்க வசதியின்றி கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, அங்கு ஒரு மார்க்கெட்டிங் ஸொஸைடி ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா ?

29th March 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லும் யோசனைகள் எல்லாம் மிகவும் சிறந்தவைகளாக இருக்கின்றன. ஆனால் கேள்வி நேரத்தில் போட்டு விடுவதால் மேற்கொண்டு எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியவில்லை. ஆயிரம் குடும்பங்களுக்கு மேல் தாலவடி பிர்க்காவில் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். கனம் அங்கத்தினர் இதில் 'அக்கறை' எடுத்து, முயற்சி செய்து அங்கு ஒரு சொஸைட்டி ஏற்பாடு செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

*Electric connections*

* 469 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) in how many Police stations in Tirunelveli district electric wiring has been completed; and

(*b*) whether electric connections have been given to them?

THE HON SRI M. BHAKTAVATSALAM : (*a*) 7 (seven).

(*b*) Electric Service connection has been given only in one case.

SRI M. K. SOMASUNDARAM : எலெக்ட்ரிக் கனக்ஷென் கொடுக்கவில்லை என்றால் உடனடியாக கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வயரிங் வேலை எல்லாம், முடிந்த பிறகு கனக்ஷன் கொடுக்க தாமதமாகாது. உடனடியாக கனக்ஷன் கொடுக்கப்படும்.

MR. SPEAKER : கேள்விகள் 470-ம், 471-ம் ஒரே சப்ஜெக்டைப் பற்றி இருப்பதால் இரண்டையும் சேர்த்து எடுத்துக்கொள்ளலாம்.

*Housing scheme*

* 470 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the places where 144 tenements are proposed to be built in 1957–58 under the Co-operative Industrial Housing Scheme; and

(*b*) the maximum and minimum cost of construction of a tenement?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Peelamedu in Coimbatore district.

(*b*) Rs. 6,158 for a double-roomed tenement, and Rs. 4,133 for a single-roomed tenement, including the cost of land.

* 471 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the places where 35 houses are proposed to be constructed in 1957–58 under the Low Income Group Co-operative Housing Scheme; and

(*b*) the maximum and minimum cost of construction of a house?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) It is presumed that the Member wants to know the places in the Coimbatore district where 35 houses are proposed to be constructed in 1957–58 through co-operative societies.